

# சிவோஹம் பாராயணத் தொகுப்பு

## சிவார்ப்பண மஞ்சரி - 007.

# ஸ்ரீ நடராஜ உபாசனை

அருளியவர் : யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

அடியார்கள் அனைவரும் எம்பெருமானின் அருள்பெற அர்ப்பணிப்பு
சிவோஹம் சிவார்ப்பண ஞானம் - 2025 11/16 ஞாயிற்றுக்கிழமை

# நடராஜ உபாசனை

# தில்லையப்பன் வணக்கம்.

## 01. காப்பு

அன்பு நடராஜன் அன்பை விரும்பியே
இன்ப நடனம் இயற்றுகிறான் - அன்புள்ளம்
கொண்ட பொருளும்; குறிப்பும், அருட்பெரியார்
விண்டபொரு ளும்அவனே வேந்து.

## 02. போற்றி

குருவடி வாக வந்தெமக் கின்பம்
கொடுத்திடும் குணநிதி போற்றி!
கருணையால் எங்கள் கடமையில் வெற்றி
காட்டிடும் கடவுளே போற்றி !
ஒருமையில் ஓங்கும் யோகியர் உள்ளே
ஒளிவளர் சுத்தனே போற்றி!
திருவுயர் அன்பு நிலயத்தில் விளங்கும்
சிவாட ராஜனே போற்றி! (1)

உன்னடி நிழலில், உன்னரு ளாலே
உயிர்க்கிறோம் உன்னடி யார்கள்
உன்னருள் ஆட்சி உலகெலாம் பரவ
ஊக்கியெம் வாழ்வினை நடத்தாய்;
அன்னையே, எங்கள் அப்பனே, சச்சி
தானந்த குருநட ராஜா
மன்னுசீர் அன்பு நிலயத்தில் விளங்கும்
மங்கல ஜோதியே சரணம்! (2)

## 03. பயன்

சிறப்பிலாத் தீமை நீங்கும் சிந்தையில் வந்தி னிக்கும்
பிறப்பினைப் பெருமை யாக்கும் பேரின்பச் செல்வம் நல்கும்
இறப்பிலா வாழ்வு சேரும் இதயம் வாழ் ஈசனாரை
மறப்பிலா தெந்த நாளும் மனதுற வணங்கு வோமே! 01

இருளிடர் அச்சம் தீரும் இகபர சுகங்கள் ஓங்கும்
திருநெறி வாழ்க்கை சேரும் தீயவர் பகைமை வீழும்
ஒருமையில் உள்ளம் ஒன்றும் ஒற்றுமை உலகி லாகும்
அருளொளி காட்டும் தில்லை அப்பனை வணங்கு வோமால் 02

## 04. நடராஜா அர்ச்சனை மந்திரம்

ஓம்சிவ குருவே ஓம்நட ராஜா
ஓம்பரம் பொருளே உனைச்சரண் புகுந்தோம்
வணக்கம், வணக்கம், வாய்மையே வணக்கம்
வாய்மனம் கடந்த தூயா வணக்கம்
துரிய ஆகாச விரிவே வணக்கம்
ஞானம் பரந்த வானே வணக்கம்;
சச்சிதா னந்த சற்குரு வணக்கம்
ஓமில் அகரமாய் ஒலிப்பாய் போற்றி,
சூரிய னுள்வளர் சுடரே போற்றி,
தீயுள் வளரும் தேசே போற்றி!

கார்மழை யாய்வருங் கருணையே போற்றி,
உலகெலாங் கோயில் உடையாய் போற்றி,
உயிரெலாம் உடலாய் உடுத்தாய் போற்றி,
ஒப்புயர் வில்லா ஒருவனே போற்றி,
பன்மையாய் விளங்கும் ஒருமையே போற்றி,

எப்பொரு ளுக்கும் இறைவா போற்றி,
எம்மதத் திற்கும் இசைவாய் போற்றி!
சைவம், வைணம், சாக்தம், கிறிஸ்தவம்,
இஸ்லாம் ஆகிய எம்மதத் திற்கும்
சம்மத மான சாட்சியே போற்றி!

அரன்மால் அயன்குகன் அல்லா பிதாவெனப்
பலமதம் போற்றும் பரமா வணக்கம்
எனதென தென்றே இறுமாந் திடர்செய்
வெறியர் காணா வித்தகா போற்றி,
அன்பு காட்டும் அற்புதா போற்றி,
இன்பமே இயல்பாம் ஏகனே போற்றி,
துன்பம் துடைக்கும் துரையே போற்றி,
அடியார்க்கு உதவும் அருளே போற்றி,
அருவாய், உருவாய், குருவாய், பிறவாய்,
எப்படி அன்பர் எங்கே நினைக்கினும்,

அப்படி யாங்கே அக்கணம் அருளும்
தோன்றாத் துணையே, துரியப் பொருளே,
புலன்களுக் கெட்டாப் போதமேபோற்றி!
உயிரும் உடலும் உள்ளும் புறமும்,
உலகும் வானும் இலகும் ஒருவா,
விண்சுட ரான கண்மணி போற்றி!
மொழியெலாம் பிறந்த ஒலியுரு போற்றி!
அகமெலாம் பொலியும் முகமலர் போற்றி,
தீதை எரிக்கும் தீஞ்சுடர் போற்றி,
வசீகர மான மலர்நகை போற்றி,

கங்கை பொங்கும் கதிர்முடி. போற்றி
மதிவளர் சாந்த மலையே போற்றி,
அபயம் அளிக்கும் அருட்கை போற்றி,
திருவடி காட்டும் செங்கை போற்றி,
ஆணவம் போகவே அழுந்தடி. போற்றி,
உய்யத் தூக்கிய மெய்யடி போற்றி,
இதயம் தோறும் பொதுநடம் போற்றி,
ஐந்தொழில் புரியும் ஐயா போற்றி, -
சிற்சபை தன்னில் செய்திரு நடத்தால்
செகவிளை யாடல் செய்வாய் போற்றி!

நெறியிலா நெறியில் பொறிவழி செல்லும்
அடியரைத் தடுத்தாள் அப்பனே போற்றி!
காணா விடினும் கண்டுகொண் டிருக்கும்
உயிர்க்குயி ரான உட்பொருள் போற்றி,
அப்பனே, உன்மல ரடியே துணையாய்
உன்னருள் ஆட்சி உலகில் விளங்கவே,
உன்பெயர் சொல்லி, உண்மை யான
பொதுநலப் பணிகள் புரிந்து வருகிறோம்:
நாடு வாழ நல்வினை தொடர்ந்தோம் ;
பணியும் பயனும் பரமா உனக்கே

வெற்றிமேல் வெற்றி விளைப்பாய் போற்றி;
பாதகப் பகைவரும் சாதக மாகத்
திருந்தி வரவே செய்வாய் போற்றி!
அலைமனம் அடங்கும் அமைதி அருளாய்;
சித்தம் நிலைக்கச் சிவக்கனல் அருளாய்;

பக்தி ஓங்கும் பரிசெமக் கருளாய்;
சஞ்சலப் பேய்களைச் சாடி அழித்தே,
கவலைக் கல்லைக் கரைத்தருள் புரிவாய்!
பொறாமைப் புல்லர் வராது விரட்டுவாய்;
அச்சமும் கலக்கமும் துச்ச நினைவும்

அரல்லர் வஞ்சமும் அதர்மப் பதர்களின்
சூதும் வாதும் சூழ்ச்சியும் பொய்யும்
அன்புச் சோலையுள் அணுகாது அருள்வாய்
உன்னருள் பணிக்கே உயிர்க்கும் எங்கள்
உடலும் மனமும் உறுதி பெற்றே
ஆற்றலும் ஆயுளும் ஆத்தும சக்தியும்
சுத்தசன் மார்க்க சுதந்திர வாழ்வும்
அருளும், அருட்பணிக் காகிய பொரும்,
அன்பும் பெருகும் இன்பம் அருளாய்!
தியாக வீரராய், யோக தீரராய்,

பூரணம் பெற்றுப் பூரணம் பரப்பும்
அமரராய், உன்னருள் ஆலய மான
உலகில் இன்ப நலஞ்செய வருளாய்!
அயனே, உன்னைத் துதித்துப் பணியும்
அடியார் குழுவில் அமர்ந்திட அருளாய் !
அப்பரைப் போலே அன்புப் பணியும்,
பாலறா வாயர் போலவுள் அறிவும்,
சுந்தரர் போலே செந்தமிழ்ச் சொல்லும்,
'இதுபொருள்' என்துணை இரண்டறக் கலந்த
மணிவா சகர்பேரல் மாசறு காதலும்,

அம்மையார் போலே அருளடி நேயமும்
ஔவையார் போலே! செவ்விய மதியும்,
திருமூ லர்போல செழுந்தவ யோகமும்,
மெய்கண் டார்போல் உய்நெறி விளக்கமும்,
பட்டினத் தார்போல் பழுதறு துறவும்,
வள்ளுவர் போலே இல்லற வாழ்வும்,
தாயுமா னார்போல் ஆய்ந்தவுள் அமைதியும்,
வள்ளலார் போலே தெள்ளருட் சோதியும்,
ஆழ்வார் போலே அடைக்கல உறுதியும்,
சங்கரர் போலே சகசாத்ம சித்தியும், 100

வியாசர் போலே வியன்பெறு புலமையும்
எங்களுக்கு அருளியுன் னிச்சையை நடத்தாய் /
அறிவதெல் லாமுன் அருளின் அறிவே;
புரிவதெல் லாமுன் பூரண சக்தியே ;
நமச் சிவாயஓம் நமச் சிவாயஓம்
ஆண்டவா, சிற்சபைத் தாண்டவா போற்றி !
ஹரஹர சங்கர, அம்பல வாணா !
போற்றி போற்றியுன் பூங்கழல் போற்றி 108

## 05. **தீபாராதனை**

உலகெலாம் அன்பு மேவி ஒருகுல மாக வாழ்க !
கலகமுந் துயரும் வீழ்க ! கருணையும் களிப்பும் பொங்க,
நலமெலாம் விளைய, ஞான ஞாயிறு பொலிய நாளும்
இலகுவாய் சுத்த ஜோதி! இறைவனே போற்றி போற்றி! 01
ஒள்ளிய துரிய வானில் ஒங்கிடும் சோதி வாழ்க!
தெள்ளிய ருள்ளே அன்பாய்த் திகழ்பரஞ் சோதி வாழ்க!
உள்ளமே தில்லை யாக ஓமொலி இசைய தாகத்
துள்ளிநன் நடன மாடும், தூயசிற் சோதி வாழ்க 02

**திருச்சிற்றம்பலம் - சிவஜோதி !**